உ

சிவமயம்

# கீழப்பூங்குடி

## ஸ்ரீ இராமானுஜர்

# தவத்திரு ஸ்ரீ மிளகாய்ச்சுவாமிகள்

# புனித வரலாறு




## தவத்திரு. இராமானுஜ அடிகள்

...காய்ச் சுவாமிகள்), கீழப்பூங்குடி



ஸ்ரீலஸ்ரீ மதுரை ஆண்டவர் சுவாமிகள்

கீழப்பூங்குடி

53-2



உ

சிவமயம்

ஸ்ரீ இராமானுஜர்

தவத்திரு.



# ஸ்ரீ மிளகாய்ச்சுவாமி கோவில்

கீழப்பூங்குடி

தவத்திரு. ஸ்ரீ மிளகாய்ச்சுவாமிக்கு
ஆண்டு தோறும் முத்தாய்ப்பான மூன்று விழாக்கள் நடைபெற்று வருகின்றன.

மாசி மாதம் மகா சிவராத்திரி அன்று

## 'பாலாபிஷேகம்'

சித்திரை மாதம் உத்திராடம் நட்சத்திரம் அன்று

## 'நட்சத்திர குரு பூஜை'

சித்திரை மாதம் இறுதி ஞாயிற்றுக்கிழமை அன்று

## 'பெரிய குரு பூஜை'

உ
சிவமயம்
தவத்திரு. ஸ்ரீ மிளாய் சுவாமி துணை
தவத்திரு. ஸ்ரீ மிளகாய் சுவாமி புனித வரலாறு புத்தகம்
அச்சிட்டு உபயமாக வழங்கிய பக்தர்களின் பெயர்கள் விபரம்.

1. திரு. P.இராசுப்பிள்ளை - ராஜாம்பாள் மிளகாய் சாமி கோவில் பூசாரிகுடும்பம்
2. திரு. S.சுகுமார் செட்டியார் சிவன் கோவில் நிர்வாகி அலவாக்கோட்டை
3. திரு. R.நாராயணன் - இந்திராணி, திரு. N.சங்கர் - மகாலெட்சுமி
செந்தூர் ஏஜென்சீஸ், கீழப்பூங்குடி
4. திரு. சுப.சேதுராமன் - சாந்தா,
திரு. S.கார்த்திக், S.வள்ளியம்மை, பேரணிப்பட்டி
5. திரு. S.கணேசன் - யோகம்மாள் ஸ்ரீக்ராஜா லாரி சர்வீஸ், மதுரை
6. திரு. V.சுந்தரம் G.H., - முத்துலெட்சுமி, திரு. S.பாபு-S.சுமதி-வீரப்பன்
திரு. V.கோகுலராணி - V.கோகுல், சின்னப்பெருமாள்பட்டி
7. திரு. K.வசந்தகுமார் பேரணிப்பட்டி
8. திரு. RM. சுப்பிரமணியன்-செல்வி, S.சக்திரம்யா, பேரணிப்பட்டி
9. திரு. R.M.மீனாட்சிசுந்தரம் - ருக்மணி, திரு.M.ராமமூர்த்தி- கோமதி
திரு. M.சந்திரசேகர் - செருவம்மாள் பேரணிப்பட்டி
10. திரு. P.சுப்பையா - பிரேமா
திரு. S.ஆதிலெட்சுமி - S.ஆதிராம் கீழப்பூங்குடி
11. திரு. P.மனோகரன் - கண்ணாத்தாள்
திரு. M.ஆதிவிஜித் - பூமதி திரு. AL.ஆதினமிளகி - பொற்கொடி
திரு. A.ராஜ்திலக் - சிவஜெயந்தன், கீழப்பூங்குடி
12. திரு. V.நாகராஜன் - சந்திரா
திரு. N.வீரசேகரன் வின்னர்எலக்ட்ரானிக்ஸ், சிவகங்கை
13. திருமதி. தனலெட்சுமி அம்மாள், திருநகர்
14. திரு. V.கண்ணன் பூக்கடை, சிவகங்கை
15. திரு. S.K.மீனாட்சிசுந்தரம் - அனுசியா
திரு. K.S.மதன் - KM.அஜய் - K.S.ஹரிஹரன்
திரு. K.M.ஜெயசமயவேந்தன் கீழப்பூங்குடி
16. திரு. உ.மோகன்(எ)நாச்சியப்பன் உதவி இயக்குநர் (ஓய்வு)
கூட்டுறவு தணிக்கைத் துறை, கீழப்பூங்குடி
17. திரு. S.காசி - செல்வி பில்டிங் காண்ட்ராக்டர், ஒக்கூர்
18. திரு. A.சௌந்திரபாண்டியன் - முனியம்மாள்
திரு. S.உடையார், திரு. S.மீனாட்சிசுந்தரம், கீழப்பூங்குடி
19. திரு. S.இளங்கோ-முழுமதி, இ.அருண்குமார், இ.பூஜாஸ்ரீ கீழப்பூங்குடி
20. திரு. திரு. உ.சாமிநாதன்செட்டியார்- ரஞ்சிதம், S.கார்த்திக் கீழப்பூங்குடி
திருமதி. வீர.மீனாட்சி ஆச்சி பேரணிப்பட்டி
21. திரு. A.T.திருவள்ளுவர் - மனோரஞ்சிதம்
திரு. T.மனோஜ்குமார், T.புவனேஸ்வரி மேலப்பூங்குடி
புவனேஸ்வரி ஹார்டுவேர்ஸ், ஒக்கூர் செல் - 97512 47935
22. திரு. A.காந்தி - A.அஜித்குமார் - A.லெட்சுமி
திரு. A.மணியா - உதயகுமார் - பிரதீப் பேரணிப்பட்டி
23. திரு. S.கண்ணன் - ராஜேஸ்வரி
திரு. K.சந்தோஷ் - K.ஸ்ரீநேஷ் கீழப்பூங்குடி
24. திரு. M.சௌந்திரபாண்டியன் மேலப்பூங்குடி
25. திரு. V.ராஜதுரை - மேலூர்
26. திரு. V.பச்சமுத்து - பொன்னழகு அம்மன்பூக்கடை, கீழப்பூங்குடி

நன்றி !

மறுபதிப்பு : சஞ்சய் அச்சகம் மதுரை - 1 செல் : 9080327001

53-2

## பதிப்புரை

வானை விசாரிக்கும் வளமரங்களும், வற்றாத் தலைக் காவிரியும் கிளிகள் தம் பச்சைச் சிறகைக் கீழே கொட்டியது போன்ற வயல் வெளிகளும் கருஞ்சிவப்புக் காப்பிப் பழங்களும், மிளகுக் கொடிகளும், ஏலச் செடிகளும் நிறைந்த குடகு எனக்களித்த குணச்செம்மல், வழிகாட்டி கீழப்பூங்குடியைச் சேர்ந்த அய்யா சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள்.

ஆன்மீகச் செல்வரான அய்யா கீழப்பூங்குடியில் சமாதி கொண்டு அருள்கின்ற மிளகாய்ச் சுவாமிகளின் சரித்திர நூலை எனக்குப் படிக்கக் கொடுத்தார். ஆலங்காடு வை. செல்லயாப்பாவலர் அவர்களால் இயற்றப்பட்டு, கீழப்பூங்குடி கூ.கரு.நா.சித. சிதம்பரம் செட்டியார் அவர்களாலும், 1930 ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டது.

அய்யா சொக்கலிங்கம் அவர்கள் மிகச் சிறந்த நல்ல தமிழில் எழுதப்பட்ட அவ்வரலாற்றை இக்காலத்திகேற்றபடி எளிய நடையில் எழுதித் தரும்படி என்னைப் பணித்தார்கள். பேரருள் நிறைந்த சித்தர் மிளகாய் சுவாமிகளின் பெருமை எனக்கு புரிந்தது. சுவாமிகளின் பெருங்கணைதான் எளிய என்னையும் இந்நூலை எழுதச் செய்துள்ளது.

இந்நூலை கீழப்பூங்குடியைச் சேர்ந்த திரு.நா.வெ.அரு.சொ.சொக்கலிங்கம் செட்டியார் (அய்யா) அவர்களும், திரு.வயி.கரு.வயிரவன் செட்டியார் அவர்களும் பதிப்பித்திருக்கிறார்கள். நகரத்தார்க்கோர் ஒரு நல்ல இதழை நடத்திவரும் பூச்சரம் திரு.பழனியப்பன் கணினி அச்சியற்றி இருக்கிறார்கள். (மறுபதிப்பு சஞ்சய் அச்சகம், மதுரை - 1)

இராமையா அடிகளான மிளகாய்ச் சுவாமியின் அருள் அனைவருக்கும் சித்திப்பதாக என நன்றியுடன் வேண்டுகிறேன்.

உ

சிவகுகமயம்

கீழப்பூங்குடியில்

திருவருட் சமாதிகொண் டெழுந்தருளியிருக்கும்

மிளகாய்ச் சுவாமிகள்

என வழங்கும்

ஸ்ரீ இராமாநுஜ சுவாமிகள்

சரித்திரம்



இஃது

கீழப்பூங்குடியார் உயர்தனவணிக குலமுதல்வர்களாகிய

திருவாளர் கூ.கரு.நா.சித.சிதம்பரஞ்செட்டியார் அவர்களும்

திருவாளர் கூ.அரு.க.வயி.வயிரவன் செட்டியார் அவர்களும்

கேட்டுக்கொண்டதற்கிணங்க

திருக்கைலாய பரம்பரைத் திருவாடுதுறை

ஆதின மகாவித்வானும், மதுரைத் தமிழ்ச்சங்கத்துச்

சைவநூற் பரிசோதகருமாகிய சேற்றூர்

மு.ரா.சுப்பிரமணிக்கவிராயராவர்கள் மாணாக்கரும்,

செந்தமிழ்ப்பானுப் பத்திராதிபரும் ஆகிய

ஆலங்காடு தமிழ்ப்பண்டிதர்

வை.செல்லையாப் பாவலர் அவர்களால் இயற்றப்பெற்றது.

மதுரை, மீனலோசினி அச்சியந்திர சாலையில்

பதிக்கப்பெற்றது. 1930 (மூலநூல் அட்டைப் பக்கம்)

மறுபதிப்பு அச்சிடும் பணியை மதுரை

சஞ்சய் அச்சகத்தார் ஏற்று அழகுர அச்சிட்டு

வழங்கினார்கள்.

5 3-2

உ

# சிவகுகமயம்
## கீழப்பூங்குடியில்
## திருவருட் சாமதிகொண்டெழுந்தருளியிருக்கும்
## மிளகாய்ச்சுவாமிகள்
## என வழங்கும்
# ஸ்ரீ இராமாநுஜ சுவாமிகள்
# சரித்திரம்

### சசிவர்னவிநாயகர் வணக்கம்.

திருமருவும் அகரமென உயர்க்குயிராய் உலகமெலாஞ்
செறிந்தெஞ் ஞான்றும்
பெருமருவும் பிரணவத்திற்பேசுமரும் பொருளாய் எப்
பேறும் கல்கி
அருமருவும் அருளொளியாய்ப் பூமனகர் எனும்பதியில்
அமர்ந்துநாளுங்
கருமருவாது அடியவருக்கு அருள்சசிவர் னக்களிற்றைக்
கருத்துள் வைப்பாம்.

### குமரவேல் வணக்கம்.

தாரகத்தின் உட்பொருளைத் தனையடைந்தோர்க்கு அருந்துணையைத்
தருமவேலூர்
ஆரகத்தஞ் சடைப்பெருமான் அங்கிவிழி தனிற்றோன்றி
ஆரன்மாதர்
சீரகத்தின் திருமுலைப்பால் அருந்திநறுஞ் சரவணத்தில்
திகழ்ந்தெஞ்ஞான்றும்
ஏரகத்தார் பூமனகர் மேவும் அறுமுகப்பெருமான்
இணைந்தாள் போற்றி.

### ஸ்ரீ இராமாநுஜ சுவாமிகள் வணக்கம்

அருவமும் உருவும் அருவுரு வமும் ஆய்
அனாதியாய் அகண்டிதப் பொருளாய்ப்
பரவுறும் ஒன்றாய்ப் பலவுமாய்ப் பரந்த
பரத்துடன் இரண்டறக் கலந்தே
தரமுறுஞ் சச்சி தானந்த மயமாய்த்
தனிப்பெரும் பூமனன் னகர்வாழ்
குரபர னாம்ரா மானுச அடிகள்
குரைகழல் களைமுடிக் கணிவாம்.

வை.செல்லையாப் பாவலர்

## ஸ்ரீ இராமாநுஜ சுவாமிகள் சரித்திரம்

கீழப்பூங்குடி என்னும் கீர்த்திமிகு நன்னகரில் சமாதி கொண்டு தண்ணருள் செய்கின்ற மிளகாய்ச்சாமிகள் என்னும் இராமையா அடிகளார் ஸ்ரீ இராமநுஜ சுவாமிகளின் தந்தையார் சுப்பையா தாசரி ஆவார். சோழ தேசக் கடற்கரையில் ஞான சம்பந்தருக்கும் திருநாவுக்கரசருக்கும் திருக்கதவம் திறந்தும், அடைத்தும் அருள் செய்து தேவாரம் பெற்ற திருத்தலமான திருமறைக்காடு என்னும் வேதாரண்யமே சுப்பையா தாசரியாரின் பூர்வீக ஊராகும். தில்லை விளாகத்தில் முதல் மணம் செய்து, பிள்ளை இல்லததால், சுப்பையா தாசரியார் ஜாதகம் பார்த்து, தொண்டைமான் புதுக்கோட்டையில் செட்டிநாட்டுச் சிற்றூரான கடியாபட்டி என்னும் இராமச்சந்திரபுரத்தில் நயினார் தாசரியாரின் மகளான பொன்னம்மாள் என்னும் நல்லியல்புக் கன்னியை நாடிச் செய்து கொண்ட இரண்டாம் திருமணத்தில் பிறந்தவரே நமது இராமையா அடிகளார் ஆவார்.

இராமையா அடிகளாருக்கு ஐந்து வயது ஆகும்போது சித்தாதி என்னும் தம்பி பிறந்தார். சித்தாதி பிறந்து இரண்டு ஆண்டுகளில் இரண்டு மகன்களையும் மனைவி பொன்னம்மாளையம் தவிக்க விட்டு, சுப்பையா தாசரியார் வைகுண்ட மோட்சம் அடைந்தார். இரு பிள்ளைகளையும் கூட்டிக்கொண்டு, கடியாபட்டித் தாய் வீட்டில் சகோதரர் பெருமாள் தாசரியாரின் பாதுகாப்பில் பொன்னம்மாள் வாழலானார்.

இராமையா அடிகளாருக்கு பதினான்கு வயதாகும்போது தனது மாமன் மகளாகிய வேங்கடசுப்பம்மாளைத் திருமணம் செய்து கொண்டார். பெருஞ்செல்வரான பங்காரு தாசரியார் இத்திருமணத்தை வெகுவிமரிசையாக நடத்தியதாக மூல நூல் கூறுகிறது. இராமையா அடிகளாரும் அம்மையாரும் அமர்ந்திருந்த காட்சி இராம பிரானும், சீதா பிராட்டியும், எழுந்தருளி இருந்தது போல் கண்டவர்க்கு ஆனந்தக் களிப்பூட்டியது என்கிறார்கள்.

இராமையா அடிகளார் தன் மாமன் இல்லத்திலேயே மனைவியாருடன் வாழ்ந்து வந்தார். அவர் தனது மாமனுடன் வைத்தியம் செய்கிறபோது கூடவே இருப்பது.

அவர் வைத்தியத்திற்காக வெளியூர் செல்லுகிற போது கூடவே சென்று வருவது வழக்கம். அவ்வாறு புதுக்கோட்டைக்கு செல்லும்போது தான் அவருக்கு உலகநாத சுவாமிகள் சன்னதியில் மெஞ்ஞான நிலையேற்பட்டது.

**புதுக்கோட்டை உலகநாத சுவாமிகள் அதிட்டானம்**

உலகநாத சுவாமிகள் திருப்புல்வயல் என்னும் திருமுருகன் திருத்தலத்தில் சுப்பிரமணியபிள்ளை குப்பாயி தம்பதிகட்குப் பிள்ளையாய் அவதரித்தார்.

இளம் வயதிலேயே உலக நாயகியம்மனின் அருள் பெற்று விளங்கிய அவருக்குக் கிராம கணக்கு வேலை என்றாலும் அவருள்ளத்தில் எப்போதும் கடவுள் தரிசனக் காட்சிகள் தோன்றிக்கொண்டே இருக்குமாம். மேலதிகாரிகளுடன் சமாபந்திக்கணக்கை முடித்துக் கொண்டிருக்கும் போது திடீரென்று தீப்பிடித்து துணியைக் கசக்கவதுபோல் கையினால் தேய்த்திருக்கிறார். அந்நேரத்தில் சிதம்பரம் திருச்சபையில் திருச்சீலை தீப்பற்றி எரிந்து இருந்திருக்கிறது. இக்காட்சி கணக்கராய் இருந்த உலக நாத அடிகளுக்குத் தோன்றியுள்ளது. சமாபந்தி அதிகாரிகள் உலக நாத அடிகளின் தகுதியறிந்து வணங்கினர்.

உலகநாத அடிகள் புதுக்கோட்டையில் இருந்து சிவகங்கைக்கு வர வீரமாகாளியின் உபாசகராய் இருந்த பொன்னையா சுவாமிகளால் உபசரிக்கப்பட்டு, அங்கு சுமார் முப்பத்தி ஐந்து ஆண்டுகள் வாழ்ந்து, உலக்தாருக்கு பல சித்துக்களால் உபதேசித்து, தனது அறுபத்திரண்டாவது வயதில் புதுக்கோட்டைக்கு திரும்பி வந்து, அங்கு மன்னர் இராமச்சந்திரத் தொண்டைமானால் வணங்கப்பெற்று அருள் பாலித்தார். குரோதன ஆண்டு பங்குனி இருபத்தியெட்டாம் தேதி ஞாயிற்றுக்கிழமை உத்திராட நட்சத்திரத்தில் திருவருள் அடைந்துள்ளார்கள். அவரது அதிட்டானம் புதுக்கோட்டையில் சிறப்புறப் பேணப்பட்டு வருகிறது.

**மெய்ஞானப் படிகளில் மேலேறிய இராமையா அடிகள் :**

அந்த அதிட்டானத்தில்தான். உலகநாத சுவாமிகளின் சன்னதியில்தான் இராமையா அடிகளுக்கும்

மெஞ்ஞானம் தோன்றியுள்ளது. அங்கு அவர் அப்போது தன்னைக் கட்டுப்படுத்த முடியாமல் விழுந்து, புரண்டு தொழுது, வணங்கி, ஆனந்த அனுபூதி நிலையை அடைந்துள்ளார்கள். மாமனாரும் மாமனும் ஆன பங்காரு தாசரியார் தன் மருகமகனைப் பித்துற்றார் எனக்கருதி அவரைப் புதுக்கோட்டையிலிருந்து கடியாபட்டிக்கு அழைத்து வந்து தன் வீட்டிலேயே பித்த சாந்தி மருத்துவம் பார்த்து வந்தார்.

இராமையா அடிகள் பகலில் கடியா கண்மாய்க்கரையில் கொப்பிடாரிகாளிகோவிலில் அமர்ந்திருப்பார். இரவில் தன் மாமனாரின் கண்டியா ஊருணிக் கண்மாய்க் கரைப்பிள்ளையார் சிலையைத் தூக்கி ஊருணியில் வீசி விடுவார். பலர் சேர்ந்து தூக்கும் அளவு பளுவுள்ள விநாயர் அடிகளாரின் பக்தியில் பஞ்சாகிப்போனார். இரவு மருமகன் பிள்ளையார் சிலையை விச, பகலில் மாமன் பலர் துணைகொண்டு பிள்ளையார் சிலையை எடுத்து வைப்பது வழக்கமாயிற்று.

மருமகனுக்குப் பைத்தியம் முற்றியதெனக் கருதி வைத்தியமும் பலமாயிற்று, காவலும் பலமாயிற்று. இராமையா அடிகளை இந்நிலையில் கண்ணுற்ற தேக்காட்டூர் சிவஞான சீலர், வாணாதிராய முருகப்பவேளாளர் என்பவர் அடிகளின் ஞான போதம் பற்றி உணர்ந்து, அவரை விடுவித்து, தீபாவளியன்று புத்தாடை கொடுத்து, இனிப்பை அளித்துக்கௌரவித்தனர். அதன்பிறகு இணங்கிய அடிகளார் உணவருந்தி அன்றே கடியாபட்டியை விடுத்து வெளியேறிவிட்டார்.

இராமையா அடிகள் யாருடைய தேடுதலுக்கும் பிடிபடாமல், ஞானத்தேடுதலில் அலைந்தார். பெரும்பாலும் மௌனம், விரும்பிக் கொடுத்தாலே உணவருந்துதல் என்று திரியலானார்.

அவரது தம்பி வைத்தியராகி, மைத்துனியையே மணந்து வாழ்ந்தார். அவரும் மாமனுடன் சேர்ந்து, அண்ணனைத் தேடினார்.

அடிகளோ சிவகங்கை வந்து சேர்ந்தார். மணவாளதாசர் என்னும் பெரியார், அடிகளைச் சந்தித்து தனது இறுதியை அறிய விரும்பினார். மாபழுக்குமோ? புளிபழுக்குமோ? எனக்

கேட்கப் புளிதான் பழுக்கும் எனக்கூறி அவரது இறுதி நாளை அறுதியிட்டுக் கூறினார். குறிப்பிட்ட அத்தினத்தன்றே மணவாளதாசர் முக்தி அடைந்தார். அடிகளாரின் சித்திகள் தெரியலாயின.

சிவகங்கை தேவேந்திரன் செட்டியார் என்ற கோமுட்டி எனப்படும். ஆரிய வைசியச் சாமியார். ஆணவம் மிக்கவர். பிற அடியார்களை இம்சிதுச் சோதிக்கிறதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அடிகளாரைப் பார்த்து நீ துறவி வேடமிட்டுத் திரிகிறாயோ? எனக்கூறி நெருப்பில் காய்ச்சிய குறடினால் அவரைச் சுடமுற்பட்டார். ஆனால் அவரால் அக்குறடைத்தூக்க முடியாமல் கனத்தும், தூக்கவிடாமல் சுட்டதும் கண்டு விழித்தார். குறடு முரடானதோ? குருடானதோ என அடிகளார் வினவ, அவரது மகத்துவம் உணர்ந்த ஆணவச்சாமி அவரை வணங்கிக் குற்றம் பொறுக்கவேணும் எனப்பாதம் பணிந்து வேண்டினார்.

அடிகளார் சிவகங்கையில், மானாமதுரையில் பின் நிகழ்வதை முன்னரே சொல்லுதல், தீராநோய் தீர்த்தல், விஷம் அகற்றுதல், புதைக்கப்பட்ட பொருளை எடுத்தல், பில்லி சூனியம் அகற்றுதல் என அன்பர்களுக்கு இன்னல் தீர்த்து வந்தார்.

மானாமதுரையை அடுத்த புத்தூரில் சிவானந்த சுவாமிகள் எனும் அதி தீவிரப் பக்குவமான பெரியாருக்கு உபதேசம் செய்து அருளினார். அப்பெருஞ் சுவாமிகள் அடிகளாரின் சீடராகி, அவரைப் பாடிய பிரபந்தங்கள் எல்லாம் தமிழில் பக்திப்பாத் திரட்டுகளாகும். அவை இந்நூலில் இணைக்கப்பட்டுள்ளன.

தீவட்டிகள் ஊர்வலம் வர, ஒற்றை மனிதராய் அவற்றிடையே அடிகளார் உலா வருவாராம். ஓயாமல் கண் சிமிட்டிக்கொண்டே இருந்ததால் அடிகாளாரைச் சிமிட்டுக்கண்சாமி என்று அழைத்தனர். பாம்புக்கடி பட்ட காலுடன், பாம்பு சுற்றிய வண்ணமே அடிகளார் நடந்து வந்ததைப் பார்த்தவர் இருந்திருக்கின்றனர்.

பரமக்குடி யமுனேசுவரத்தில் காக்காத்தோப்பு மயானத்தில் பேரொளிப்பிரகாசராக அடிகளார் இருக்கத் தொடங்கினார். இரவு நேரத்திரல் மயானத்தில் வான் அளாவிய பிரகாசம் இருப்பதறிந்து ஊர் மக்கள் சென்று பார்க்கையில் ஒளி மறைந்தது. சிமிட்டுக்கண்

சாமி எதிர்வரக் கண்டு அவரது சித்து விளையாட்டென்பதை அறிந்தனர்.

அதுபோல சித்தர் யமுனேசுவரக் கண்மாயில் நடக்கிற போது வெள்ளம் வரவும். மறுநாள் பகலில் தரிசுநிலம் போலத் தண்ணீரில்லாமலும் இருந்தது பார்த்தனர். அடிகளின் பெருமை அனைவருக்கும் தெரியவரலாயிற்று.

பரமக்கடி முத்தாளம்மன் கோயில் தெரு தங்கம் எனும் தாசி கீழோர் சிலர் தூண்டுதலினால் சுவாமிகளை இல்லத்திற்கு அழைத்து, குளிப்பாட்டி, உணவளித்துத் துய்க்கத் தயாரானாள். கொல்லன் உலையில் புகுந்த கொசுப்போல தானே மயக்கமடைந்து விழுந்தாள். மறுநாள் காலை தாழ்ப்பாளிட்ட கதவு அப்படியே இருக்க சுவாமிகளைக் காணாள். நீர்பிரியாமல் வயிறு பெருத்து மயங்கி, காக்காத் தோப்புமயான மண்பத்தில் சுவாமிகள் காலடியில் விழுந்து. அழுது கதறி, மன்னிப்பு வேண்டினாள். திருந்தியதையும் வருந்தியதையும் கண்ட சுவாமியின் புன்னகையே மருந்தாயிற்று. உடல்நோயும் மனநோயும் தீர்ந்து ஒழுகலானாள் தாசி.

பரமக்குடி புலவர் நாகலிங்கம் பிள்ளை. புரட்டாசி மாதத்தில் திருப்பதிக்கு சுவாமிகளையும் அழைத்துக்கொண்டு குடும்பத்துடன் யாத்திரை சென்றார். புரட்டாசி மாதம் முழுவதும் திருப்பதியிலேயே தங்கி ஐப்பசி மாதம்தான் திரும்பி வந்தார். ஆனால் ஊராரோ சுவாமிகள் புரட்டாசி நான்காம் சனிக்கிழமை பரமக்குடி பசனை மடத்தில் இருந்ததாகத் தெரிவித்தனர். சுவாமிகளின் அருளிச்செயல்கள் மக்களுக்கு தெரிய வரலாயிற்று.

பரமக்குடியில் ஒரு பெண்ணின் வீட்டுத் தோட்டத்தில் மிளகாய்ச் செடிகள் புழு அரித்துக் காய்க்காமல் இருந்தன. அடிகளாரிடம் அப்பெண் விண்ணப்பிக்க அடிகளோ மிளகாய் நன்றாய்க் காய்க்கும் என்று ஆசிர்வதித்தார். புழுக்கள் இன்றி மிளகாய்ச் செடி பழுத்தது. அப்பழங்களை ஒரு கடகத்தில் தூக்கி வந்து அடிகள் முன் வைத்து அப்பெண் வணங்கினாள். அடிகளோ மிளகாய்ப்பழங்கள் அத்தனையும் உண்டு தெய்வீகப் புன்னகையால் அருள் செய்தார். அன்றிலிருந்து அடிகளார் மிளகாய்ச்சாமிகள் என அழைக்கப்பட்டார்.

பரமக்குடி ஆற்றில் ஒரு சமயம் பெருமழை பொழிந்து. கடல்போலப் பெருகி நீரோடியது. அடிகளோ தோணி உதவியின்றி, நடந்தே மறுகரை அடைந்த அதிசயம் நடந்தது. அடிகளாரின் பெருமை தெரியத்தெரிய அவரைச் சுற்றிக் கூட்டம் பெருகலாயிற்று.

கூட்டத்தைத் தவிர்க்க விரும்பிய அடிகளார் பரமக்குடி அருகில் உள்ள இளையான்குடியில் வசிக்கலானார். இளையான்குடி துருக்கர் எனப்படும் முஸ்லீம்கள் நிறைந்த பகுதி அடிகள் தமது அன்பர்களிடம் மஞ்சுப்பொடி காவல என்று பொடிவேண்டும் என்று கேட்பார். துருக்கர் சிலர் மஞ்சள் பாஷாணம் கொடுத்தனராம். ஆனால் அடிகள் அதனையும் மூக்கில் ஏற்றிச் சுவாசித்து முறுவல் மாறாமல் இருப்பார்களாம்.

இளையான்குடியை அடுத்த திருவெள்ளூருக்கு அடிகளார் செல்கையில் துருக்கர் சிலர் வழி மறித்து மிளகாய்ச்சாமி யாரே என்றழைத்துக் கையை பிடித்து இழுத்துள்ளனர். அடிகளோ கோபமடைந்து அட முரடரே எனக்கூறி கையை உதறிக்கொண்டு திருவெள்ளூர் அய்யனார் கோவிலுக்கு வந்து அமர்ந்து விட்டார். துர்த்துருக்கர் இருவரும் பார்வை இழந்து மயங்கிக் கிடக்க, உறவினர்கள் நடந்ததை அறிந்து திருவெள்ளூர் அய்யனார் கோவிலில் அடிகளாரை அடைந்து திருவடி பணிந்து வேண்ட அடிகளார் அருட்பார்வையால் பார்வையிழந்தோர் பார்வை பெற்று, சர்க்கரை, நைவேத்தியம் வைத்து வணங்கிச் சென்றனர்.

திருவெள்ளூரிலிருந்து, ஒச்சந்தட்டு, வல்லக்குளம், அரண்மனைக்கரை ஆகிய ஊர் சென்று மீண்டும் இளையான்குடி சாலைப் புதூரில் அடிகளார் பனை ஓலைக்குடிசையில் இருந்து வந்தார். அங்கு அவர் தூங்குகையில், சாக்கு நிறைய மிளகாயை வைத்து, சுற்றிலும் இலந்தை முள் தட்டிகளால் அடைத்து, குடிசைக்கு நெருப்பு வைத்து விட்டனர் சில துருக்கர்கள். குடிசை பற்றி எரிய அடிகளோரோ எந்தவிதப்பாதிப்பும் இன்றி வெளிவந்தார். அடிகளாரின் குடிசைக்குத் தீ வைத்தவர்களுக்கு கொடிய சுரநோய் பற்றிக்கொண்டது. அவர்களைத் தொடக்கூட உறவினர்களால் முடியவில்லை. பள்ளி வாசலுக்குச் சென்று பாத்தியா ஓதிவேண்டினர். சுர நோய் கூடியதே தவிரக்

குறையவில்லை. இது மத மாச்சரியத்தால், பெரியார் ஒருவரைக்கொல்ல நினைத்த குற்றம் என்பதை அறிந்து, ஆண், பெண்கள் திரண்டு காய்ச்சல் வாயப்பட்டவர்களை அடிகளாரின் திருப்பாதம் முன் கிடத்தி அடிகளாரைத் துதித்து, மன்னிக்கவும், சுரேநோய் தீர்க்கவும் வேண்டினர். அடிகளார் அருள்பாலிக்க துருக்கியர் நோய் தீர்ந்து அவரைத் தங்கள் மஸ்தானாகப் பாவித்து பள்ளி வாசலுக்கே அழைத்துச் சென்று அவர் முன் பாத்தியா ஓதிப் பரவசம் கொண்டனர். அது முதல் துர்மதி பிடித்த துருக்கர்களால் ஏற்பட்ட இடைஞ்சல்கள் நின்றன.

தாயமங்கலம் கிளியனேந்தல் கிராமத்தில் அய்யங்கார் ஒருவருக்கு வடமொழிச்சுலோகம் சொல்லி அருளிய அடிகளாரின் சித்து விளையாட்டுக்கள் எல்லாம் அவரது பெருங்கருணையின் பிரதிநிதிகள். அருளிச் செயல்கள் என்பது தான் உண்மை. மக்களை அடிமைப்படுத்த. பயமுறுத்த அவை நடந்ததில்லை. அவர்களுக்கு அறிவுறுத்தவும் அவர்களை ஆன்மிக நெறிக்குப் பயன்படுத்தவும் நடந்தன.

காளையார்கோவிலை அடுத்த புலிக்கண்மாய் சிற்றூர் பல அண்டுகளாக வானம் பொய்த்து வறண்டு கிடந்தது. மங்கல நாடு சென்று, புலிக்கண்மாய்க்கு அடிகளார் வந்தவுடனேயே மழை பெய்து பூமி குளிர்ந்தது. அடிகளார் பேரணிப்பட்டிக்கு வந்தார்கள்.

பேரணிபட்டிக்கு அடிகளார் வந்தபோது சுமார் எழுப்பத்திஐந்து வயது இருக்கும். பேரணிபட்டியில் மேலமடம், சமாதிக்கோவில், கீழ விநாயகர் கோவில், மாந்தோப்பு, சில வீட்டுத்திண்ணைகளில் வீற்றிருப்பார். இடையிடையே கீழப்பூங்கடி என்ற பூமனகரத்திற்கும் தங்கச்சி வீட்டுக்குச் செல்வதாகவும், நெல்லி வளநாடு செல்வதாகவும், கூறி எழுந்தருளுவது வழக்கம். கீழப்பூங்குடியில் இராமதீர்த்தம், ஊருணி மேற்கு விநாயகர்கோவில், இலுப்பைத் தோப்பு, மேலமடம், ஆதிமூல சுவாமிகள் மடம், சில வீடுகளில் திண்ணைகளில் வீற்றிருப்பார்.

தான் கீழப்பூங்குடியில் சமாதி கொண்டு எழுந்தருளப் போகிறதை குறிப்பில் உணர்த்தி தம்மைக்குளத்தங்கரை இராமன்,பச்சரிசிஇராமன்,இலுப்பப்பழம் தின்னலாம் என்று

கூறுவதும் உண்டு.

பேரணிப்பட்டி அன்பர்கள் சுவாமிகளை வேண்டி அவரது குருபூஜையை சித்திரை மாதம் நான்காம் ஞாயிறன்று கொண்டாடி பூஜை செய்து அன்னதானம் செய்து வணங்கினர்.

கீழப்பூங்குடியில் மேல மடத்தில் இருக்கையில் அவரது தாயார் பொன்னம்மாள் கடியாபட்டியில் பரமபதம் எய்திய காலை சுவாமிகள் குடியிருந்த கோவில் இடிந்து விட்டது எனக்கூறி ஐந்து நாழிகை ஒடல் அசைவின்றி இருந்திருக்கிறார்கள் அந்த நேரத்தில் தன் தாயாரைப் பரமபதம் அனுப்பித் திரும்பிய அதிசயம் நடந்ததாகச் சொல்கிறார்கள்.

அடிகளாரின் மனைவியராகிய வேங்கட சுப்பம்மாளோ அடிகளாருக்காகப் பிறந்த வீட்டில் காத்திருந்து பின்னர் தனது தந்தையுடன் காசி சென்று அங்கேயே மோட்சம் அடைந்தார்கள்.

நாட்டரசன்கோட்டை தன வணிகர் மெய்யப்ப செட்டியார் பூங்குடியில் அடிகளை வணங்க அடிகளோ அவர் மேல் எச்சிலைக் காறித்துப்பினார். அந்த அருளமுதம் அவரைத் துறவியராக்க கோவிலூர் ஆதினத்தில் வேதாந்தம் கற்று சோழநாடு சிக்கல் அருகில் பொருள் வைத்தசேரியில் வேதாந்த மடாதிபதியாகி விளாங்கினார்.

கீழப்பூங்குடி குறவன் இராமன் மனைவி காந்தி என்பவளின் பெண் குழந்தையை அடிகளார் தமது திருக்கையால் தூக்கி அணைத்து முகத்திலும், வாயிலும் முத்தமிட்டு அருளிச்சென்றார்கள். அப்பெண் குழந்தையான சின்னம்மாளே துறவியாகி பட்டமங்கலத்தில் ஆனந்தம்மாள் என்ற பெயருடன் மடம் அமைத்துப் பலருக்கு வழிகாட்டி வந்தார்கள்.

பேரணிப்பட்டியில், கீழப்பூங்குடியில் ஆறு ஆண்டுகள் இருந்து அருள்பாலித்த அடிகளுக்கு ஆண்டுதோறும் சித்திரை இறுதி ஞாயிற்றுக்கிழமை அன்று பேரணிப்பட்டியில் குரு பூஜை மகோற்சவத்தை சிறப்புற நடத்திவந்தார்கள். ஏழாம் ஆண்டு சித்திரை மூன்றாம் வாரம் கீழப்பூங்குடியார் குரு பூஜை நடத்த விரும்பி அடிகளை வேண்டிக்கொண்டார்கள்.

தனது குருபூஜை பெரிய குருபூஜை மலையாளக் குருபூஜை,ஞாயிற்றுக்கிழமை போவோம் எனக்கூறிய

சுவாமிகள் கீழப்பூங்குடிக்குச் செல்லாமல் உச்சிப் பொழுதுவரை இருந்தது கண்டு அவர்கள் மனம் வருந்தித் திரும்பி வந்தனர். அந்த வாரம் கீழப்பூங்குடியில் குறித்த வண்ணம் குருபூஜை நடைபெறவில்லை.

சுவாமிகளோ அன்று இரவே யாரும் அறியாமல் இராமதீர்த்த ஊருணியின் தென்கரையில் தான் சமாதி அடைய இருக்கிற இடத்தில் வந்து கண்திறவாமல், வாய் திறந்து உரையாடாமல் இருந்த இடம் விட்டு எழாமல், உணவூட்டிய போதும் உண்ணாமல், பத்மாசனத்தில் நிட்டையில் எழுந்தருளி இருந்தார். ஐந்தாவது நாள் பெரும்புயற்காற்றும் பெருமழையும் வந்தன. அப்போதும் சுவாமிகள் அப்படியே இருந்தது கண்டு அன்பர்கள் சுற்றிக் கொட்டகை போட்டு சுவாமிக்கு மெத்தை, திண்ணை கொடுத்து உபசரிக்க சுவாமிகள் ஏற்றுக்கொள்ளவில்லை.

வெளியூரிலிருந்து வெகுசனங்கள் பெருவாரி வந்தனர். சுற்றிலும் கயிறு கட்டிக்காவல் செய்து தரிசிக்க வந்தபக்தர்களுக்கெல்லாம் கீழப்பூங்குடியில் தமது வீடுகள், சிவன் கோவில், மடாலயம், இலுப்பைத் தோப்பு முதலிய இடங்களில் கீழப்பூங்குடியார் உணவளித்து வசதிகள் செய்து கொடுத்தனர்.

சுவாமிகள் சொற்படி ஒருவாரம் முன்னால் புதுக்கோட்டை உலகநாத சுவாமிகள் அதிட்டானத்திற்கு பால் காவடி எடுத்துத் தரிசனம் செய்த அன்பர்கள் திரும்பி வந்துவிட்டனர்.

அடிகள் உணவு, உறக்கமின்றி, உரையாடுதல் இன்றியோகநிட்டையில் ஆழ்ந்தது அறிந்து சிவகங்கை, மானாமதுரை, பரமக்குடி, யமுனேசுவரம், இளையான்குடி, தாயமங்கலம், மாங்காடு, கடியாபட்டி, பேரணிப்பட்டி முதலிய ஊர்களிலிருந்து பல்லாயிரம் பேர் கூடினர்.

சித்திரைக்கடைசி ஞாயிற்றுக்கிழமை, பகல் பதினைந்து நாழியளவில் நமது சற்குரு நாதர் மிளகாய்ச் சுவாமிகள், இராமையா அடிகளார் கீழப்பூங்குடி இராம தீர்த்தம் ஊருணித் தென்கரையில் வடக்கு முகமாகப் பத்மாசனத்தில் அசைவற்று அமர்ந்த வண்ணமே சச்சிதானந்த மயமான தன்னேரில்லா தனிநிலை முக்தியடைந்தார்கள்.

அரோகரா அரோகரா ஒலி விண் முட்டியது. கோவிந்தா கோவிந்தா என்ற குரல்கள், பசனைகள் நிறைந்து வழிந்தன. வானம் பூமழை தூவிற்று, வையம் ஆன்மீகத்தேன் அருந்தி மகிழ்ந்தது அடிகளார் திருவருள் பெற்றார். திருவருள் பிறர்க்குச் சித்திக்கச் சமாதிக்கோவில் அடைந்தார். சாலிவாகன சகாப்தம் 1856 விஜய வருடம் சித்திரை மாதம் 26-ஆம் தேதி ஞாயிறு கிருட்டிண பட்சம், சஷ்டி திதி, உத்திராட நட்சத்திரம் உதயாதி 15 நாழிகையளவில் கடக லக்னம் தாமத வேளை குரு ஓரையில் இராமய்யா அடிகள் சித்தி அடைந்தார்கள்.

சிவகங்கை இராணியார் காத்தம நாச்சியார் அடிகளாரை சிவகங்கையில் கொணர்ந்து சமாதி செய்ய முயன்றார். பேரணிப்பட்டியார், கடியாபட்டியார் தங்கள் ஊரில்தான் தவமுனி அடங்க வேண்டும் எனத்தவித்தனர். கீழப்பூங்குடியாரோ அடிகள் தமது ஊரில் அமர்ந்து அடங்கியதால் அங்கேயே அடக்கம் செய்ய வேண்ட அனைவரும் ஒப்பினர்.

ஊருணிக்கரை இராமன், இலுப்பைப் பழம் தின்னலாம் என்று திருவாய் மலர்ந்தருளிய சுவாமிகள் வாக்குப்படி ஊருணி தென்கரையில் இலுப்பமரத்தடியில் அடிகளார் அமர்ந்த விதேகம் அமைந்த இடத்திலே அடக்கம் செய்ய முடிவு எடுத்தனர்.

கீழப்பூங்குடி மேலவளவு தீர்த்தப்ப செட்டியார் வழி வந்த கண்ணப்பச் செட்டியார், சிவராமன் செட்டியார் இருவரும் இராம தீர்த்தம் ஊருணிக்குள் இறங்கி ஊருணித் தென்கரை முழுவதையும் இராமய்யா அடிகட்குச் சொந்தமாகும்படி மனம் வாக்கு, காயம் ஆகிய திரிகர சுத்தியுடன் நீர் வார்க்கிறோம் எனக்கூறி தீர்த்தத்தை அள்ளி மூன்று தரம் தாரை வார்த்து தத்தம் செய்தனர்.

இராமையா அடிகட்கு அபிசேகம் செய்து, அலங்கரித்து விமானத்தேரேற்றி, பசனைகள் முழங்க, பல்லாயிரவர் உடன்வர பல்லியம் இசைக்க நகர் வலம் வந்து இராம தீர்த்தம் தென்கரையில் அடிகள் வீற்றிருந்த இடத்திலேயே சமாதி செய்து அவ்விடத்தில் சிவலிங்கம் எடுப்பித்து பூஜை செய்து வரலாயினர்.

இராமையா அடிகள் சமாதிக்கோவில் முதலில் சிறிய மண்டபமாகப்பிறகு முப்பதுவருடம் கழித்து, கீழப்பூங்குடி

என்னும் பூமனகரத்தில் அன்பர்கள் அனைவரும் முயன்று பிள்ளையார். முருகன், நந்தி ஆகிய பரிவார மூர்த்திகளும், உற்சவ இராமனஜமூர்த்தியும் நிறுவி உருத்ரோத்காரி ஆண்டு ஆனி 17 ஞாயிறன்று குடமுழுக்குச் செய்து வைத்தனர்.

அது முதல் சுவாமிகள் குருபூஜை நித்ய கட்டளை உற்சவங்களை கீழப்பூங்குடி உயர்குல தனவணிகர்கள், நாட்டுக்கோட்டை நகரத்தாரான அறப்பெருஞ்செல்வர்கள் கூ.கரு. நா.சித.சிதம்பரம் செட்டியார் அவர்களும், கூ.அரு.க.வயி.வயிரவன் செட்டியார் அவர்களும் வழிவழியினரும் முறைப்படி செய்து வருகின்றனர்.

மிளகாய்ச் சுவாமிகளின் அற்புத அருளாட்சி இன்றும் நமக்கு தெரிய வருகிறது. அச்சந்நிதி முன் நின்று வேண்டுவன நடக்கின்றன. பூமிதனில் ஞானம் மொழியவந்த பேரருளாளான் அருள் பொழியக் காண்கிறோம். பக்தர்கள் பெருகி, அறங்கள் பெருகி, வளமும், நலமும் பெருகி வளரக் காண்கிறோம்.

வாழ்க ராமையா மாதவன் பொன்னடி
வாழ்க ராமையா மாதவன் தொண்டர்கள்
வாழ்க ராமையா மாதவன் தன்கதை
வாழ்க இக்கதை ஓதும் அன்பரே !
வாழ்க வையகம் மாமறை ஆகமம்
வாழ்க என்றும் சிதம்பர வண்மையோன்
வாழ்க என்றும் வைரவ வள்ளல்
வாழ்க பூமனகரமும் வாழியவே !

ஆலங்காடு செல்லையாய் பண்டிதர்

மீண்டும் இக்கதை மெய்ப்புற எழுதிட
சான்றோர் இருவர் தாமுதவ செய்தனர்
ஆண்டகை இராமய்யா அடிகள் அருளால்
யாண்டும் அவர் வளம் அடையப் பெறுவரே.
வாழிய இராமையா அடிகள் வண்தவம் !
வாழிய இராமையா அடிகள் தொழும்மனம் !
வாழிய நேமி ! வாழிய பூமி !
வாழிய சாமி ! வாழிய வாழியவே !
இனப்பகையின்றி ஈடிணையின்றி
தன வணிகராம் தமிழ்க்குலம் வாழி !
அறங்கள் இயற்றி அறவழி போற்றி !
வரங்கள் பெற்று மானிடம் வாழி !

திருச்சிற்றம்பலம்

இராமையா அடிகளார்பால் ஞான உபதேசம் பெற்ற புத்தூர் சிவானந்த சுவாமிகள்

# அழகர்மேல் பாட அருளிய பதிகம்

விநாயகர் வணக்கம்.

ஒருகொம்ப தாய்ச்சுழி மேலோங்கி னானை உயிர்க்குயிராய்ச்
சிறுகொம்ப தாகி வெளியோ டுலவிடுஞ் சிற்சுகத்தைத்
தருகொம்ப தாகி இரண்டற்ற அன்பர் தமைப்பிரியாது
உறுகொம்ப னான களிற்றினைப் போற்றி யுளஞ்செய்வேனே.

## பன்னிரு சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

முத்திபெரு சுத்தசிவ சத்துவம் ஆகியது
மூலமுத லாகும் உணர்வாய்
முதர்கதிரு தருகிரண துவிதமறு பதியதித
மூதறிவது உருவாகிடும்
பத்திவளர் அன்பர்களும் உத்தமர் களும்உரிய
பணிசெய்துன் அடியைநாடிப்
பாடிக் குதித்துஅமுத ஆனந்த மாரிசொரி
பரவசமும் மேவிடவுமே
சத்துவம் உதிக்கஅருள் எழுகின்ற சொருபமே!
தமியனேன் சடவாதனை
சங்கற்பம் எனுமளறில் மனமணி மறைந்துவினை
தழைவதை விவேகவாள் கொண்டு
அத்துவித வெட்டியுனை நத்திடு பதத்திலினி
அடிமைகொண்டு எனையாளுவாய்
அடிநடுவு முடிவிலாது இலகுபர வெளியிலொளி
அருள் இரா மையகுருவே.
சந்ததமு நினையன்றி வேறொன்றை உணர்கிலாச்
சாயுச்ய பதமதாகி
சங்கற்பம் அறவொன்றை நாடிஅத் துவிதமாஞ்
சச்சிதா னந்தமாகித்

தொந்தமில வானசம் பந்தமறு தொந்தமாம்
துரியா அதீதநிறைவாய்த்
துள்ளாது துள்ளுமனம் அசைவதறு பேரின்ப
சுகவாரி தன்னில் மூழ்கி
சிந்தையது வாகாத சனனவுற வாகினேன்
தேவநின் மயஞ்செய்குவாய்!
தெய்வமே! திருவருளி அருவான உருவமே!
சிற்சுகோ தயமோனமே!
அந்தமே பரசுத ஆனந்தமே இகபரமும்
அரியஉற வானபொருளே!
அடிநடுவு முடிவிலாது இலகுபர வெளியினொளி
அருள்இரா மையகுருவே.
கருவறையில் உருவாகி உருவிலுறு பொருளாய
கலைவேதம் விளைபீடமாய்க்
காலொத்து மெருற்ற நகரநடு வனலுமாம்
கதிர்மதிகள் பிரியுமிடமாஞ்
சிருவறையின் வளையமென ஹறியென்ற மகரமேற்
திருவொடு புரிமாலுமாஞ்
செப்புமேன் முக்கோண வீடுகுடி சிகரமிடு
சிவமுதி ருருத்ராதியாய்
மருள்பெருக மறுகோண புவியிலுறு வகரமும்
மகேசனீஸ் வரியும் உறவாய்
மறைநந்தி கொலுவீதி வழிகண்டு மனமேரு
வட்டவீ டாகாயமாய்
அருமறைகள் தருமுதிரு கிரணவொளி யதனிலெனை
அடிமைகொண் டிடும்வடிவமே!
அடிநடுவு முடிவிலாது இலகுபர வெளியினொளி
அருள்இரா மையகுருவே
ஆக்கையே பொய்யென்று ஊக்கமே மேலிடவும்
அறிவதறி யாமையின்றி
அங்கமது புளகிதம் ஆகியே நிலையான
அனுபூதி பெருவாழ்வதாய்
போக்குவர வின்றியதில் நீக்கமற நிறைகின்ற
பூரணப் பொருளாகியே
பொல்லாத மாயையின் அகன்றுநா னின்னருள்
பொருந்துநா ளெந்தநாளோ?

வாக்குமனம் அணுகாத கோசரப் பொருளாகி
வாய்க்கும் படிக்கதான
வடிவமே உயிரிலுயர் விளைவான சொரூபமே!
வஞ்சநெஞ் சர்க்கெட்டிடா
தாக்கமே எனவன்பர் பாக்கிய மெனப்புகழும்
அமுதமே! அமுதரசமே !
அடிநடுவு முடிவிலாது இலகுபர வெளியினொளி
அருள்இரா மையகுருவே!
தீராத சனனமாய்ப் பொராடு மாயையைச்
சிக்கிட வசப்படுத்தித்
தெளியாத சிந்தையாய்ப் பந்தமே கதிதந்து
இழுக்கின்ற கொடியமனதை
நீராள மாயனலின் மெழுகாய் உளங்கனிய
நிர்க்குணம் அதற்குணவதாய்
நின்றநிலை யாய்வங் காந்தமு னிரும்பாகும்
நேர்மைபோல் துரியபதியில்
பேராத சகசமாம் நிருவிகற் பத்திலே
பேசாத உறவாகியே
பின்னிடைய உன்னாமல் நன்னிலைய தாகியே
பேரின்ப நிறைவருள்வாய் !
ஆராரு மறியாத சூதான மோனமே ! அட்டசித் தாடுபொருளே !
அடிநடுவு முடிவிலாது இலகுபர வெளியினொளி
அருள்இரா மையகுருவே.
ஒன்றுமறி யாதவெனை நன்று பொருளீதென
உணர்த்தியதை நம்பிவந்தும்
உண்மைதெரியாதபடி நன்மையாய் தீமையாய்
உறவாகி உறுவதல்லால்
இன்றுவரை கொண்டநற் சாதனைத் தொழிலால்
இயற்றுகதி யேதுமிலையே
என்செயலி னால்ஆவ தேதொன்று மில்லையே
என்செய்கு வேன் ஐயனே
என்று மொழி யாச்சனன மரணசா கரமதில்
இயங்குமது வேதொழில்தாம்
இதுனென்ன அதிசயம தானபழ வினையதோய்
எளியநா னுணர வெளிதோ?

அன்றுவந் தாண்டபொருளீ தென்று வெளியாகும்
அமுதமே ! மதுரரசமே !
அடிநடுவு முடிவிலாது இலகுபர வெளியினொளி
அருள்இரா மையகுருவே !
புண்ணோடு வாடும் இடை பொறிகலையின் உடையோடு
பொற்கும்ப முலையை நாடிப்
பொட்டோடு மதிமுகப் பொலிவோடு சவ்வாது
புனுகோடு பூசநாறும்
எண்ணோடு கூடஅதி பேராசை மூடஅப்
பேதையர்கள் பின்னோடியே
பேசுமுறை நாடியவர் பேணுமறவாடலே
பேறென்று மதிமயங்கிப்
பண்ணோ டுஉனைத்தினம் பாடிநற் பத்தியாற்
பலகலைகள் தன்னைநாடிப்
பற்றிலா ரொடுகூடி அவரவர்க் குரியநற்
பணிபுரிந் துய்யவறியேன்
அண்ணோடு பெருகும் ஆனந்தசா கரம்அதனில
அடியனே னென்றுபடிவேன் ?
அடிநடுவு முடிவிலாது இலகுபர வெளியினோளி
அருள்இரா மையகுருவே !
பட்டுண்டு பணியுண்டு பவுசுண்டு தவிசுண்டு
பதிவிரதை மனைவியுண்டு
பாலுண்டு பாகயம்மேன் மேலுண்டு சற்குணப்
பாலர்பதி னாறுமுண்டு
செட்டுண்டு கனகமணி மாடிமேல் வீடுண்டு
திரிகரண சுத்தியுடனே
சிவனடிக்கு அன்புபூண்டு அடியரைப் பொருளெனச்
சென்றணைந்து உபசரித்து
இட்டுண் டிருக்கிலங் கேதுகுறை ? தீவினையும்
இல்லவே யில்லையில்லை !
எனனமுன் திருவருள் புரிந்தும்உப தேசித்த
எந்தையே பந்தவினையால்
அட்டுண் டுறாங்கிஅல மருவதல் லாமலோர்
அனுபூதி நிலையறிகலேன்
அடிநடுவு முடிவிலாது இலகுபர வெளியினொளி
அருள்இரா மையகுருவே !

ஞாலமதி லேஅறிஞர் யோகமத னேகம்அதை
நாடியறியாதகத்தில்
நான்முகனும் ஓதஅரி தானபிர ணவம்அதனை
நாட்டியொளிர் குண்டலிதனை
மேலெழ ஏழுப்பியிரு வளியையும் அடைத்துமேல்
வீட்டின்வழி யைத்திறந்து
வீடுகுடி ஏறியதில் ஊறும்அமு துண்டுபல
வினைகள் பொடி கண்டுநாளும்
ஒலிடு சிலம்புமுதல் வீணைதம் பூருபல
ஒலியோடு தனைமறந்து
உடலநெக் குருகமனது உலையின்மெழு காகவே
உள்ளொளிக் குளளமர்ந்தார்
ஆலடியின் மோனகுரு ஆனபொருள் நீயென
அடைந்தவடி யேனையாள்வாய்!
அடிநடுவு முடிவிலாது இகுபர வெளியினொளி
அருள் இரா மையகுருவே!
வழிகண் டலர்ந்தநறு மலர்கொண் டிடாதுமன
மலர்கொண்டு தூவிநிதமும்
மதியுண்டது அன்றியுனது அருள்கொண் டுறாதுளக்
கண்கொண்டு நாடியுனையே
கண்டுகைக் கொண்டுமலர் கொண்டணிந் தாகிலும்
கைகுவிக் காதபாவி
வெளிகண்டு கொண்டாதி வழிகண்டுகொண்டுவிண்
மேல்கொளக் கால்நிறுத்தி
மின்னுகுண் டலியங்கி யாற்பொழிய அமுதுண்டு
மேவும் படிக்கருளுவாய் !
அளிகெண்டி வடியனுக் கன்றுவந் தாட்கொண்டு
அரும்பொரு ளுணர்த்துமரசே !
அடிநடுவு முடிவிலாது இலகுபர வெளியினொளி
அருள்இரா மையகுருவே !

இராமையா அடிகள் பதிகம்
முற்றிற்று

திருச்சிற்றம்பலம்

# கீழப்பூங்குடி மிளகாய்ச் சுவாமிகள்

## இராமையா அடிகள் துதி

காலத்தின் மூலத்தை யார் கணித்தார்?
கருவிற்குள் வருமுன்னே எங்கிருந்தார்?
ஆலமர வித்திளைத்து மரம் பெருக்க
ஆனதென்னை பெரும்வித்து மரம் இளைக்க
ஞாலத்து நிகழ்வுதனைத் திட்டமிட்டு
நடந்துவதார் ? இறந்தபின்னை போவதெங்கே ?
சாலத்தான் புதிரானா உலகுக் குள்ளே
தானுமொரு புதிரானர் மிளகாச் சாமி?

உறவெல்லாம் உதறிவிட்டுத் திரிந்த சாமி !
உலகத்தார் உறவாக்கி வரித்த சாமி !
மறைவாக இருக்காமல் வெளிச்ச மாகி
மயானத்தில் தியானங்கள் செய்த சாமி !
குறையென்று வந்ததெல்லாம் தீர்த்த சாமி
கும்பிட்டு நிற்பவரைக் காத்த சாமி
அறவாழ்வே பெரிதென்றே ஆர்த்த சாமி
அய்யாவே ! எங்களது மிளகாய்ச் சாமி !

வானவில்லை நூலேணி கட்டி ஏறி
வளைப்பதைப்போல் இருக்கின்ற வாழ்க்கைக் குள்ளே
நானென்று நீயென்று சண்டை யிட்டு
நடந்தவடு பதியாத ஓட்டத் துள்ளே
தேனுக்குள் நஞ்சூட்டும் மனிதர்க் குள்ளே
தினந்தோறும் எமைக்காத்து நிற்கும் சாமி
ஞானஅறம் தர்மவழி காட்டும் சாமி
ஞானியர்க்கும் ஞானியான மிளகாய்ச் சாமி !

நெருப்பள்ளி எரித்தாலும் எரியாச் சாமி
நீரிப் பெருக்கில் தோணியின்றி நடந்த சாமி
வெறுப்பள்ளி வீசினார்க்கும் அன்பைச் சொல்லி
விழிமலராய் ஆசிசொன்ன வேதச் சாமி
இருப்பாக ஊருணியின் தென்கரைக்குள்
இலுப்பைமரம் அடிகண்டே எழுந்த சாமி
நுனிப்பாக இனிக்கின்ற பட்டினத்தார்
நுட்பமிகு கரும்பான மிளகாய்ச் சாமி!

திருமறையாம் காட்டினிலே பிறந்த சாமி
சிவகங்கை நாட்டினிலே திரிந்த சாமி
ஒரு மறையும் இல்லாமல் ஞானியாகி
ஓய்வில்லாச் சிந்தனையில் கரைந்தசாமி
கருவறைக்கும் கல்லறைக்கும் நடுவில் உள்ள
கணக்கெல்லாம் புரிந்திருந்த சித்துச்சாமி
குருபூசை காணுகின்ற பூங்குடிக்குள்
குடியேறி அருளுகின்ற மிளகாய்ச்சாமி

எத்திசையில் செல்வதென அறியாப் போதில்
இதுதிசையாய் வழிகாட்டி நடத்தும் சாமி!
கொத்திவரும் பொறாமையாம் குணங்கள் கேடு
கொண்டுவரும் புத்தியெல்லாம் திருத்தும் சாமி
ஒத்திசைத்தே வாழுகின்ற உயர்ந்த வாழ்வை
உபதேசம் செய்யவந்த உண்மைச்சாமி
சக்திதரும் புத்திதரும் சித்திசேர்ந்த
தத்துவமாய் முத்திகொண்ட மிளகாய்ச் சாமி

காற்றின்றி இருந்திடவா முடியும்? அய்யா
கடவுளின்றி எது நடக்கும்? பக்தி என்னும்
ஊற்றத்தை எமக்களித்தே வாழ்த்து கென்றே
உருவான குருபூசைப் படைய லிட்டோம்
போற்றியெனப் போற்றுகிறோம் அடிகள் உங்கள்
புகழ்பாடித் துதிக்கின்றோம்! பூங்குடிக்குள்
ஏத்துகிற பதம்துதித்தோம் யாரும் நன்றாய்
இருப்பதற்கே அருள்செய்க! மிளகாய்ச் சாமி!

கவிஞர். சித. சிதம்பரம்
ப.மு.சித.வீடு பழநியப்ப விலாசம்
முதல்வீதி, முத்துப்பட்டணம், காரைக்குடி

# மதுரை ஆண்டவர் என்னும் ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகள் வரலாறு

## பதிப்புரை

கீழப்பூங்குடி ஒரு திருத்தலம். இதற்குக் கடம்ப ஆரண்யக்ஷேத்திரம் என்றும் பூமனகர் என்றும் பெயர் உண்டு. இங்கு சமாதி கொண்டருளிய மிளகாய்ச் சுவாமிகள் பெரிய இராமன் போனால் சின்ன இராமன் வருவான் என்று குறிப்பிட்டபடி அவருக்குப்பின்னால் கீழப்பூங்குடி மண்ணில் விதையானவர் ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகள்.

இவரது சரித்திரத்தையும் இவர் மேல் பதிகத்தையும் சேற்றூர் மு.ரா.சுப்பிரமயணியக் கவிராயர் மாணாக்கர் செந்தமிழ்ப் பானுப் பத்திராதிபர் ஆலங்காடு தமிழப்பண்டிதர் வை.செல்லையாப் பாவலர் எழுதி கீழச்சிவற்பட்டி மெ.குழ.மு.முத்தையாச் செட்டியார் அவர்களும் கணபதிபுரம் நாராயணன் செட்டியார் அவர்களும் 1930ல் வெளியிட்டு உள்ளார்கள்.

சித்தர் மதுரையாண்டவர் பரஞ்சோதி அடிகள் வரலாறு இன்றையத் தலைமுறைக்கும் தெரிவதற்காக கீழப்பூங்குடி. நா.லெ.அரு.சொ.சொக்கலிங்கம் செட்டியார் அவர்களும் வயி. கரு.வயிரவன் என்ற நாச்சியப்ப செட்டியார் அவர்கள் முதல் நூலைச் சீர்பித்து அப்படியே பதிப்பித்திருக்கிறார்கள்.

இப்பனுவல் இத்தலைமுறைக்கும் இனிவரும் தலைமுறைக்கும் ஞானிகள் சிறப்பை எடுத்தோதுமாக !

சித.சிதம்பரம்

# ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகள் வரலாறு
## சரித்திரச் சுருக்கம்

திருவருட் சக்தியும் தேவநாயகனும் செவ்வேற் குமரனும் முறையே செங்கோல் செலுத்திய தெய்வீகத்தையுடையதும் சிவ பெருமான் அன்பர்கட்கு அனுக்கிரகிப்பான அறுபத்துநான்கு திருவிளையாடலியற்றப் பெற்றதும் ஆகிய செந்தமிழ்ப் பாண்டிய நாட்டில் பிரமன் சப்த கன்னியர் காராளர் என்னுஞ் சிவயோகி முதலியோர் களாற் பூசிக்கப் பெற்றதும் மூர்த்தி தலம் தீர்த்தம் ஆகிய மூவகை விசேடங்களான் மிக்கதும் அருணாசல அடிகள் இராமைய அடிகள் என்னும் இயற் பெயர்களையுடைய மிளகாய்ச் சுவாமிகள் எனவழங்கும் திருவருட் சித்தர் தன்னேரில்லாச் சச்சிதானந்த மயமாய்ச் சமாதி கொண்டெழுந் தருளியிருக்கப்பெற்ற சால்புடையதும் கடம்பாரண்ய சேத்திரம் பூமனகரம் என்னும் காரணப் பெயர்களுடன் விளங்குவதும் ஆகிய கீழப்பூங்குடியில் இற்றைக்குச் சுமார் (30) முப்பது வருடங்களாக மதுரையாண்டவன் என்னும் ஸ்ரீ பரஞ்சோதிச் சுவாமிகள் சிவானுபூதிச் செல்வராய சீவன் முத்தராய் அமர்ந்தருளி அன்புடன் வணங்கும் அடியார்களின் அல்லல்களைந்தனுக்கிரகித்து வருவதை அன்பர்கள் யாவரும் இன்புற அறிவர்.

இற்றைக்கு முப்பத்தாறு வருடங்கட்கு முன்னர் விதேக முத்தியடைந்து பூமனகரத்திற் சமாதிகொண் டெழுந்தருளி மிளகாய்ச் சுவாமிகள் என்னும் இராமையா அடிகள் தாம் சமாதி கொண்டெழுந்தருள்வதற்கு முன் பெரியராமன் போனால் சின்னராமன் வருவான் எனத் தமதன்பரிடத்தில் தாமடைந்தபிறகு தம்மைப் போலும் உயிர்நிலையுற்ற ஒப்பிலார் ஒருவர் வருதலை உணர்தியருளுவர். அவ்விராமைய அடிகள் அருளியவாறே திருவருட் சமாதி கொண்டெழுந்தருளிய சில்லாண்டுளுக்குள் இப்பரஞ்சோதியடிகள் பூமனகரத்திற்கெழுந்தருளினார்.

இப்பரஞ்சோதியார் பார்ப்பவர்கட்கு உடலோடு கூடி வாழும் ஒருவரைப் போல் தோன்றிலும் உண்மையில் உடற்பற்றென்பது சிறிதுமில்லாதவர். அதாவது, தாமரையில் நீர்போல் உடலுக்குந் தமக்குஞ் சிறிதுஞ் சம்பந்தமற்றவர் என்பது ஊன்ற நோக்குவார்க்குத் தெற்றென விளங்குவதொன்றாம்.

இவ்வடிகள் வெள்ளையப்பன் என்றும் வெள்ளையப்ப முனிவர் என்றும் ஓயாமற் கூறும் உயரிய உண்மையை ஆராயின் செந்தீவண்ணனாகிய சிவபெருமான் திருமேனி முழுவதும் திருநீறணிந்து திகழும் படிகழனைய வெண்ணிறத் திருமேனியையே புகழ்ந்து வெள்ளையப்பன் எனவும் வெள்ளையப்ப முனிவர் எனவும் துதிக்கின்றனர் என்பது நன்கு புலனாகும்.

இப்பரஞ்சோதியடிகள் மேலைச் சித்ம்பரம் என்னும் திருப்பேரூரில் வேளாளர் குலத்தில் திரு அவதாரஞ் செய்து மாயா சம்பந்தம் அற்றவராய் மெஞ்ஞானிகட்குரிய இலக்கணங்கள் யாவும் ஒருங்கே அமையப்பெற்றது விளங்கித் தமது முப்பத்திரண்டாவது வயதில் திருப்பேரூரை விடுத்து கலியுகவரதராய்க் கடையேனையும் ஒரு பொருள் என கருதி ஆட்கொண்டருளியவராய் அன்பர்கட்கு இம்மை மறுமையாகிய இரண்டிடத்தும் இன்னல் களைந்து இன்பமளிப்பவராயிலங்கும்' ஆறுமாமுகத் தண்ணல் ஞானாசாரிய மூர்த்தமா யெழுந்தருளி இருக்கப் பெற்ற பழநி மலைக்கு வந்து தியானம் செய்து கொண்டமர்ந்திருந்தனர்.

அதன் பின்னர் பழநியம் பதிக்கணித்தாயுள்ள குமரலிங்கம் என்னும் பதியில் வந்து தங்கித் தம்மையடுத்த அன்பர்கட்கு எழுமையும் ஏமாப்படைத்தாம் வித்தியா தானத்தை அளித்துக்கொண்டு வீற்றிருந்தனர்.

தமக்கு அறவே விருப்பமில்லாதிருந்தும் அன்பர்களின் வேண்டுகோட்கிணங்கித் திருமணஞ் செய்து கொண்டு சின்னாள் சொல்லிய முறைப்படி இல்லறம் நடத்தினார். இடையிடையே பழநிமலைக்கு வந்து குமரகுருபரனை மெய்யன்புடன் வாழ்த்தி வணங்கி சில தினந்தங்கியிருந்தும் மீண்டு குமரலிங்கத்தை அடைவர்.

இவ்வாறு நிகழுங்கால் ஒருதினம் பழநிமலையில் தண்டாயுத பாணி சந்நிதானத்தில் பரஞ்சோதியார் நின்று கண்ணீர் சொரிய நாத்தழு தழுப்ப மெய்மயிர் பொடிப்பத்துதித்து வணங்கிநிற்குஞ் சமயம் தன்னடைந்தாரைத் தன் வண்ணமாக்கும் சண்முக தேசிகன் திருவருள் பார்வையிற் திளைக்கப்பெற்றனர். தன்னை மறந்தனர். ஆடிப் பாடி அகங்களி கொண்டனர். இவ்வாறு பாலர் உன்மத்தர். பேயர் போலாகி உண்மை ஞானமலர்ந்து இல்லறத்தையுவர்த்துக்கான்ற சோறெனக் கண்டுநீத்து வெளியேறி திருவாலவாய்க் கணித்தாயுள்ள வடிவேற் கரையென்னும் பதியில்வந்து சில்லாண்டுகள் தங்கி தியானபரராய் வீற்றிருந்து திருவாலவாயென்னும் மதுரை மாநகரத்திற்கு எழுந்தருளினர்.

அடிகள் ஓயாமல் வெள்ளையப்பன் என்றும் வெள்ளையப்ப முனிவர் என்றும் இவ்வாறு செபித்துக் கொண்டிருப்பதற்குக் காரணம் சண்முகப்பெருமான் சடாமகுடதாரியாய்த் திருமேனி முழுவதும் அணிந்த திருநீற்றையுடையவராய் முனிவரவேடத்துடன் ஆசாரிய மூர்த்த மாயெழுந்தருளி உபதேசித்து மறைந்தருள அதுகாரணமாகவே அடிகள் தமக்குபதேசித்த ஆசாரியன் திருவுரு வத்தைத் தியானித்து செபிக்கின்றனர் எனவும் யூகிக்கப்படுகிறது.

அல்லது பழநியாண்டவனுக்குத் திருநீறபிஷேகஞ் செய்யப்பெற்று விளங்கும் திவ்வியமங்கள சொரூபத்தைத் தியானித்துத்தான் இவ்வாறு கூறுகின்றனரோ யாதோ அறியோம். இதிங்ஙனமாக பரஞ்சோதியடிகள் மதுரையம்பதியில் ஸ்ரீ மீனாட்சியம்மன் ஆலயத்தின் வெளியில் வீதியில் அம்பிகையின் சந்நிதானத்திற்குச் சிறிது தென்புறமாய் ஒற்றைக் கல்லில் தியான சமாதியில் பல வருடங்கள் காற்று, வெயில், கடும்பனி, மழை இவைகட்கஞ்சாது வீற்றிருந்தார்.

பரஞ்சோதியடிகள் தியானசமாதி முற்றி மெஞ்ஞான சொரூபியாய் விளங்கினார். இவ்வாறு விளங்கிய அடிகள் கடம்பாரண்ய ஷேத்திரமாகிய பூமனகரத்திற் கெழுந்தருளத் திருவுளங்கொண்டு வாணிப முறையில் மதுரைக்குச் சென்றிருந்த மதுரை மேலூரிலுள்ள காசுக்காரச்செட்டியார் வகுப்பைச்சேர்ந்த அண்ணாமலைச் செட்டியார் என்னும் அன்பருடன் வண்டியில் புமனகரமாகிய கீழப்பூங்குடிக்கு வந்து சேர்ந்தனர்.

மதுரையிலிருந்து கீழப்பூங்குடிக்கு வந்தமையின் பரஞ்சோதி சுவாமிட்க்கு மதுரையாண்டவன் என்னும் பெயர் விளங்குவதாயிற்று. அடிகட்குப் பிள்ளைத்திருநாமம் பரஞ்சோதி என்பதேயாம். அடிகளைப் பற்றிய சரித்திரம் இதற்குமேல் சிறிதும் புலனாகவில்லை. அறிந்த அன்பர்கள் அறிவிப்பின் பரஞ்சசோதியடிகளன் சரித்திரத்தை அழகுற வரைந்து இரண்டாம் பதிப்பில் வெளியிடுவதுடன் அறிவித்த அன்பர்களின் பெயரையும் குறிப்பிடுவோம். எமது நன்றியும் அவர்கட் குரியதாகும். அடிகளின் திருவருளும் உண்டு.

ஞானானந்த மூர்த்தியாகிய ஸ்ரீ பரஞ்சோதியடிகளிடத்து அடியேற்குள்ள பேரன்பானும் அடிகட்கு அணுக்கத் தொண்டர்களாய் உள்ளவர்களின் விருப்பத்தானும் அறிந்தவரை அடிகளின் சரித்திரத்தை எழுதியும் பதிகம் ஒன்று பாடிச் சேர்த்தும் வெளியிட்டிருக்கின்றேன். அறிஞராயுள்ளார் குற்றங்களைந்து குணமேற் கொள்வராக !

- வை.செல்லையாப்பாவலர்

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

சிவகுருமயம்

கீழப்பூங்குடியென்னும் பூமனகரத்தில் சிவ அனுபூதிச் செல்வராய் எழுந்தருளி இருக்கும்

மதுரை ஆண்டவன்

என்னும்

ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகள் பதிகம்

இயற்றியவர் ஆடுங்காடு தமிழ்ப் பண்டிதர்

செந்தமிழ் பானுப் பத்திராதியர்

வை.செல்லையாப்பாவலர் அவர்களால்

ஆண்டு 1930

நேரிசை வெண்பா

சுந்தரஞ்சேர் மாமதுரைத் தொன்னகரின் மேவிமிகுஞ்
செந்திருவார் பூங்குடியின் சேர்ந்தொளிரும் - நந்தலிலா(து)
ஓங்கு பரஞ் சோதியின் மேலோர் பதிகம் பாட அணி
தாங்கு கணேசா கருளைத் தா !

நூல்

பதினான்கு சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

சச்சிதா னந்தமயம் ஆனபர வெளியதாய்ச்
சகள நிட் களம் அதாகித்
தன் இணையிலா வகோசரம் உடையதாய் மிகுஞ்
சாட்சியாய் ஆட்சி உளதாய்
உச்சிதமது ஆன தத்துவ மசிப் பொருளதாய்
உண்மையாய் ஓங்கும் உணர்வாய்
உள்ளொளிக்கும் உள்ளான தெள்ளமுதம் ஆகியே
ஒன்றாக நிலை அருள்வ தாய்
அச்சம் அற்றிடு சஞ்சலமதாய் யானெனும்
அகந்தை அற்றோர்க்கு அணியதாய்
அடிநடுவு முடிவிலாது இலகுபதம் அருள்வதாய்
அமர்பர சிவத்துடனே
மெச்சும் படிக்கும் இரண்டற்ற நிலை மேவியே
மிகு சீவன் முத்தன் ஆகி
மிளிர் பூமனகர் மேவி அருள் பரஞ்சோதியே !
தமெஞ்ஞான மோன குருவே !
போதகாரியமறைத் தொன்றும் ஆணவமொடு
புகுந்திரோ தாயி மாயை
பொல்லாத மாயேயம் ஒல்லும் காமியமெனப்

புகலும் இவை நிலைபெறுதலான்
மேதையுறு நாதன் அருள் ஆணை அதனாலுமே
மேவிப் பிறந்திறந்து
மிளிர் கொள்ளி வட்டம் கறங்கெனவும் ஆகையால்
மிகவும் சுழன்று இளைத்தேன்
நாதநாதந்தம் கடந்த பரிபூரணா !
நாயினேற்கு உன்னை அல்லால்
நாடிஒரு வேறுதுணை யார் ? அடியேன் அடிமை
நன்மை பெறவே அருளுவாய் !
வேதமுடிவு ஆன பொருளாகு நிலை உற்றமெய்
விளக்கே ! விளக்கின் ஒளியே !
மிளிர் பூமனகர் மேவி அருள்பரஞ் சோதியே !
மெஞ்ஞான மோன குருவே !
பொன்மை நீலாதி தன்னிறமும் உற அவற்றில்
பொருந்து தன்மைத்தாகியே
பொலிவுற்று நிற்கும் பளிங்கெனச் சத்திதன்
புகலொணாப் பேதமெல்லாம்
நின்மலன் தானாகவே தோன்றி வேற்றுமையில்
நீங்கி நின்றிடுவன் என்றும்
நிகரறும் அருட்சக்தி இடமாக அன்றியே
நின்று தானாக முளையான்
வன்மையின் அருட்சத்தியும் சிவனுமாகவே
வைத்தலால் இவ்வுலகெலாம்
வடிவொத்தும் ஒவ்வாத வகையில் ஆண் பெண்ணென
வயங்கும் உணர்குணகுணியமாம்
மின்மலியும் அருளன்றி வேறுதுணை இலையென
விளங்கும் அருள் மயமாகியே
மிளிர் பூமனகர் மேவி அருள் பரஞ்சோதியே !
மெஞ்ஞான மோன குருவே !
சீலமுடனே வளிஇரண்டையும் அடக்கிமேல்
திகழ் சுழுமுனா வழியினில்
சேரும் பிராண வாயுவை அசைவிலாமலே
செம்மை பெறவே நிறுத்தி
ஏல விடயங்களின் வழிச்செலாதே மனதை
ஈர்த்து முக்கோண முதலாய்
எண்ணும் ஆதாரங்கள் ஆய்ந்தக் கரங்களையும்
இயல்பினில் உணர்ந்து அவற்றின்
பாலமரு மதிதெய்வ தியானமுடன் மேற்போய்ப்



படர்ந்த மதி மண்டலத்திற்
பகரொனாது ஒழுகும் அமுது உண்டுடலம் முழுவதும்
பாரித்து அகங் கனிந்தே
மேலான சோதியை நினைத்து அருளும் உன்
விழுப்பெருமை புகல எளிதோ ?
மிளிர் பூமனகர் மேவிஅமர் பரஞ்சோதியே !
மெஞ்ஞான மோன குருவே !
உத்தமன ஆதி முழுமுதல்வன் அகளங்கனவன்
ஒன்றினும் தோய்வின்றியே
உளசுயம்பிரகாசமாய் நிற்கும் உண்மையதின்
உயர்வான சிவமெனவு மேற்
பெத்தமுளவாம் அணுக்களின் வழியில் மூன்றாகு
பெற்றியிற் சக்தி எனவும்
பிரிவிலாத் தாதான் மியத்தின் இருதிறமாய்ப்
பிறங்கும் ஐந்தொழில் நடாத்தும்
அத்தகைய நிலையினிற் பதியெனவும் அபிதானம்
அடைகுவன் ஒருத்தனே யாம்
அக்கரங் கட்கெலாம் அகரமே போலும்
ஆன்மாக்கள் தோறும் இயைவன்
மித்தையிற் றிடுமுறையும் இஃதென அறிந்தவன்
விழுப்பொருளும் உணர்த்தும் அரசே !
மிளிர்பூமந கர்மேவிஅமர் பரஞ்சோதியே !
மெஞ்ஞான மோன குருவே !
கள்ளொழுகு பூங்குழல் கமலமா மதிமுகம்
கனகவரை அனைய முலைகள்
கம்பெனும் கந்தரம் கருநெய்தல் கண்ணெனக்
கழறியே மதி மயங்கி
உள்ளமது உடைந்து மிகமாதர் சிற்றின்பமே
உண்மையென்று அறிவிழந்து அங்கு
ஓடிமிகவாடி முத்தாடி உறவாடியே
ஒன்றுபட்டு அதரம் ஊறும்
எள்ளலுறும் எச்சில் உண்டுஉரை பதற உடைநெகிழ்ச்சி
இயைசகன நீவி மேவும்
எங்குமுடல் வியர்வையாற்பொங்கு அவதிக்குள் ஆழ்ந்து
இடருற்ற கொடிய னேனும்
விள்ளரிய மெஞ்ஞான மேவும் படிககருள்
விளக்கமதளித்து அருளுவாய் !
மிளிர் பூமனநர் மேவி அருள் பரஞ்சோதியே !

மெஞ்ஞான மோன குருவே !
மந்திரம் மருந்து யோகம் இரத குளிகை முதல்
மன்னும் இவையாதி நூலின்
வழியறிந்தே இயற்றிடினும் அவையால் வரும
மறையாதி கலை ஞானமும்
அந்தமுள திரிகால ஞானமும் மணிமாதி
அட்ட சித்தகளும் அல்லால்
அடிசேரும் ஞானம் ஆசான் அருளினன் அன்றியே
அடைவுறா தாகலானின்
கந்தமலர் அடிகளைக் களைகணாப் பற்றினேன்
கருணை செய்து அடியனேன் தன்
கன்ம பந்தம் தொலைந்துய்யவோர் உண்மை நெறி
காட்டி ஆண்டு அருள் புரிகுவாய் !
விந்திய மடக்கம் அவனுக்கும் உன் பெருமையை
விளம்புதற்கு அரிதாகுமால் !
மிளிர் பூமனகர் மேவிஅமர் பரஞ்சோதியே !
மேஞ்ஞான மோன குருவே.
பொன்னுண்டு பணியுண்டு புவியுண்டு பதியுமுண்டு
புத்திரர்கள் உண்டே னாளும்
பூதலத்து ஓங்கு நற்புகழுண்டு கற்பினால்
புகலு மனைவியர்களுண்டு
தென்னுண்டு கனகமணி மாடிமேல் வீடுண்டு
திரிகரண சுத்தி யுண்டு
செல்லலுறு நோயின்றியே திகழும் வாழ்வுண்டு
திகடமுடைய மேனி யுண்டு
அன்ன கோட்டகமும் உண்டு இறைவனின் திருவடிக்கு
அன்புண்டு மறுமை அதனில்
ஆழிவிலா ஆனந்த வீடுண்டு நின்னை வந்து
அடைபவர்க் கென்று உணர்ந்தேன்
மின்னு பரிபூரண விலாசமே ! மதுரை ஆண்ட
வன் என்னும் மெய்க்கரும்பே !
மிளிர் பூமனகர்மேவி அமர் பரஞ்சோதியே !
மெஞ்ஞான மோன குருவே !

தனை அடுத்துள பன்னிறங்களைக் காட்டுமோர்
தக்க படிகம் போலவே
சார்வுறும் கருவிகளின் இயல்பையே காட்டும் உயிர்
தன்னியல்பு அறிந்து இவைகள்
எனையடையும் நிறமின்றி உரிய இயல்பு அன்றெனவும்
இணையில் அருளால் அறிந்தே
இவ்வாறு கருவிஞானம் கழிய உந்தனது
இலக்கணம் அறிந்த பெரியோன்
தினையளவுமே மிகுங் முடுகிப்பாய்ந்து கடலினிற்
சென்றடங்குதல் போலவே
வினையறும் இவ்வழியன்றி வேறுவழி இலையென
விளம்பி எனை ஆண்ட அரசே !
மிளிர் பூமனகர் மேவி அமர் பரஞ்சோதியே !
மெஞ்ஞான மோன குருவே !
மண்ணாதி ஆறாரையும் கடந்து ஒளிர்கின்ற
மறையின் முடிவான பொருளே !
மனதொருமை உற்ற நல்லடியருக்கு அமுதமென
மதுரிக்கும் ஞான ரசமே !
கண்ணே ! கருத்தே ! கருத்தில் உறும் ஒளியே !
கரும்பே ! கணிக்க அரிதாம்
கருகூலமே ! நறுந்தேனே ! முதிர்ந்தமுக்
கனிகொண்ட இனிய சாறே !
பண்ணே அ தோடிரண்டற்ற இசையே ! அதன்
பயனே ! பழுத்த சுவையார்
பைந்தமிழ்த் துறைதொறும் பொங்கும் இன்பப் பெரும்
பாக்யமே ! வாய்க்கும் உறவே !
விண்ணே ! அவ விண்ணலத்து விதமாம் நிலமென
விரவு உலகெங்கும் ஆகி
மிளிர் பூமனகர் மேவிஅமர் பரஞ்சோதியே !
மெஞ்ஞான மோன குருவே !
வாழ்க சைவம் இவ்வையத்து ஓங்கி எந்நாளும்
வாழ்க பூமனகர் பரஞ்சோதி மாதவத்தோன்
வாழ்க மாபரஞ்சோதி மாதவன் அடியவர்கள்
வாழ்க இப்பதிகம் மகிதலத்தின் வாழியவே !

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ பரஞ்சோதி அடிகள் பதிகம்
முற்றுப்பெற்றது

குருவே துணை

உ

சிவமயம்

தவத்திரு.

ஸ்ரீ மிளகாய்ச்சுவாமி துணை




**சாலி வாகன சகாப்தம் 1856 விஜய வருடம் சித்திரை மாதம் 26-ம் தேதி ஞாயிற்றுக்கிழமை கிருட்டின பட்சம், சஷ்டி திதி, உத்திராடம் நட்சத்திரம் உதயாதி 15 நாழிகையளவில் கடக லக்னம் தாமத வேளை குரு ஓரையில்**

## இராமானுஜ சுவாமிகள்

**(மிளகாய் சுவாமிகள்)**

**"முக்தி" அடைந்தார்கள்.**



ஸ்ரீ இராமானுஜர்
தவத்திரு. ஸ்ரீ மிளகாய்ச்சுவாமி கோவில், கீழப்பூங்குடி